சிவமயம்.

# சிதம்பரக்கும்மி.




விநாயகர் துதி.

சீர்மேவுந்தில்லையம்பலத்தில்-அன்பு
சேரக்கும்மித்தமிழ்ப்பாடக்
கார்மேவுமேலைக்கோபுரவாசல்
கற்பகப்பிள்ளையார்காப்பாமே. (௧)

முக்குறுணிவிநாயகர் துதி.

சர்க்கரைமோதகந்தேங்காயுங்-கொண்டு
சந்நிதிமுன்பாகத்தான்படைத்து
முக்குறுணிப்பிள்ளையாரைவேண்டி
முழங்கிக்கும்மியடியுங்கடி. (௨)

சுப்பிரமணியர் துதி.

கோலமயிலின்மீதேறி-வந்து
கும்பமுனிக்கருட்செய்யும்
பாலசுப்பிரமணியன்பிரகாசத்தைப்
பாடிக்கும்மியடியுங்கடி. (௩)

கங்காதேவிக்குக்கைகூப்பி-யாருங்
கயிலைவெற்பிலுள்ளோரணம்பண்ணி
தங்காமற்சிவகாமிசந்நிதி
சார்ந்துக்கும்மியடியுங்கடி. (௪)

கருதஞ்சுருதிக்கெட்டாத-சிவ
காமசுந்தரிவாசலிலே
விருதம்பேசிச்சிறுகுழந்தைகள்
வேதம்படிக்குதுபாருங்கடி. (௫)

நாலுபுறத்திலுங்கோபுரமா-மதி
ளுமிலங்குமாளிகையாம்
காலோராயிரங்கொண்டொருமண்டபம்
கட்டியிருக்குதுபாருங்கடி. (௬)

தூயமறைமுதலாராய்ந்து-இங்கே
துலங்கியமூவாயிரவர்
ஞாயம்பொருந்தியதேவசபைவந்து
நாடிக்கும்மியடியுங்கடி. (எ)

சாந்துப்பொட்டுதளதவென்ன-நல்ல
சந்தனவாடைகுமுகுமென
கூந்தலழகிக்காரியெல்லாங்காலைக்
குவித்துக்கும்மியடியுங்கடி. (அ)

அஸ்தகடகம்பளபளென்ன-சொல்லும்
அரைநாண்மாலைதளதளென்ன
விஸ்தாரமாகநின்றுகொண்டுகையை
வீசிக்கும்மியடியுங்கடி. (கூ)

கைதனில்விபூதிப்பையுங்கொண்டு-அவர்
கண்டத்திலுருத்திராட்சமாலைபூண்டு
வைதிகபூசைகள்செய்கின்றதீட்சதர்
வாழக்கும்மியடியுங்கடி. (௰)

கோவிலுக்குநாலுபேர்களுண்டாம்-அவர்
குறித்தமுறையாய்ப்பூசைசெய்ய
பாவித்தபின்பவர்வேறொருவர்வசப்
படுத்துவாரென்றேகும்மியடி, (௰க)

ஆண்டுக்குள்ளாரபிஷேகமுண்டாம்-பின்னும்
அதிலேரெண்டுதிருநாளாம்
வேண்டிவந்தார்கள்கலிதீருமென்று
விளாந்துக்கும்மியடியுங்கடி. (௰உ)

பூமிபுகழ்ந்திடுந்தில்லைப்பதி-அது
பூலோகக்கயிலாசமென்று
தாமரைப்பூவினில்வாழ்கின்றலட்சுமி
தாயார்சந்நிதிபாருங்கடி. (௰௩)

மூலஸ்தானத்தைக்கண்டாயே-நல்ல
முத்திபிதுவென்றுகொண்டாயே
காலெடுத்தாடியநிர்த்தசபேசனைக்
கண்டுதரிசிப்போம்வாருங்கடி. (௰௪)

தில்லைமாகாளியேடாடிகா-அவள்
சித்தங்கலங்கித்தலைகுனிந்தாள்

வெல்லுவதெப்படியென்றொருகாலை
விண்ணிலெடுத்தார்பாருங்கடி. (௰௫)

நெற்றியில்வேர்வைமுத்துதிர்ந்து-மெத்த
நேத்தியதாய்ப்பரத்தோடிவர
பத்திபுடன்பொன்னம்பலவாணனைப்
பணிந்துக்கும்மியடியுங்கடி. (௰௬)

தித்தியென்றீசனடனம்புரிய-மெய்த்
தேவர்கள்பூமழைதான்சொரிய
மத்தளங்கொட்டியகோபாலகிருஷ்ணனை
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. (௰௭)

சிதம்பரமென்றுசொல்லாமல்-விச்
சித்திரக்கூடமென்றுசொல்லி
நிதங்கொண்டாடுமைங்கரர்கள்வந்து
நின்றிருக்கின்றார்கள்பாருங்கடி (௰௮)

[illegible]ணிக்கைக்கொண்டுவாருங்கடி-இந்தா
கனகசபையைப்பாருங்கடி
மாணிக்கவாசகர்புகுந்தவாசலை
மதித்துக்கும்மியடியுங்காடி. (௰௯)

அன்னமுடன்பால்தேன்கனியும்-செய்யும்
அபிஷேகமுண்டென்றனும்
பொன்னம்பலந்தன்னிற்சந்திரமெலியைப்
போற்றிக்கும்மியடியுங்கடி. (௨௰)

முத்தியளித்திடுஞ்சந்நிதிக்குச்-சொல்லும்
மேளமுந்தாளமும்மேதிக்கடி
சத்தம்பெருகியகண்டாமணியோசை
சந்நிதிக்கேர்வையாம்பாருங்கடி. (௨௧)

புட்டுவடையுந்தேன்குழலும்-மணப்
புத்துருக்குநெய்சம்பாவும்
சட்டப்படிதவறாமலையன்
சந்நிதிக்கேர்வையாம்பாருங்கடி. (௨௨)

சுற்றிவந்துச்சியைப்பாருங்கடி-அங்கே
சோதிமயக்கம்பமொல்பதடி
[illegible]த்துவங்கள்தொண்ணூற்றாறுங்கூடிச்
சமைந்தசபையைப்பாருங்கடி. (௨௩)

போதமயக்கந்தொலைந்தேனடியின்று
புகுந்துக்கும்மியடியுங்கடி (௬௨)
நாடுந்தைப்பூரணபூசத்திலே-ஏக
நாயகனற்குருவாரத்திலே
ஆடியநாடகம்பாம்புப்புலிதனக்
காமென்றுகும்மியடியுங்கடி (௬௩)
சஞ்சிதக்கர்மங்கள்விட்டேனடி-பவ
சாகரத்தையொழித்திட்டேனடி
குஞ்சிதபாதத்தைத்தொட்டேனடிமனங்
கூர்ந்துக்கும்மியடியுங்கடி. (௬௪)
சொல்லும்பொருளையுமற்றுயோ-மூன்
றுன்பமனைத்துமொழித்தாயோ
அல்லும்பகலையுமற்றுயோவில்லை
யாநந்தத்தாண்டவம்பாருங்கடி. (௬௫)
விதியெழுத்தைக்கிழித்தாச்சு-முன்
விட்டகுறைவந்துதொட்டாச்சு
மதியமிர்தமுமுண்டாச்சுதென்று
வாழ்த்திக்கும்மியடியுங்கடி. (௬௬)
கோவிலுக்குள்ளேயனேகமுண்டு-அந்தக்
குறிப்பறிந்ததைச்சொல்லுவீரோ
தேவரகசியம்பள்ளியறைவந்து
தெளிந்துக்கும்மியடியுங்கடி, (௬௭)
சண்டேஸ்வரர்தமைப்பாருங்கடி-அந்தச்
சந்நிதிக்கேகைகொட்டுங்கடி
மண்டலம்புகழுமழகர்வாசலில்
வாழிபாடுவோம்வாருங்கடி. (௬௮)
வீட்டுக்கவலைகள்விட்டொழியார்-மெத்த
வீம்புகள்பேசியேவீணலைப்பார்
பாட்டைப்படித்தாலும்சிதம்பரம்வந்த
பலன்தல்லவோபாருங்கடி. (௬௯)
புத்திரபாக்கியமெத்தவுண்டாம்-பசும்
பொன்னுமணிப்பூஷணமுமுண்டாம்
பத்தியுடன்கோபாலகிருஷ்ணன்
பணியக்கும்மியடியுங்கடி. (௭0)
சிதம்பரக்கும்மி-முற்றிற்று.

